


# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

விண்வெளி விஞ்ஞானி சிவதாணுப்பிள்ளை அவர்கள்
எழுதிய பிரமோஸ் (வெற்றி ரகசியம்) என்ற நூல்
வெளியீட்டு விழாவில மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

ஜய – புரட்டாசி– 2014 – செப்டம்பர்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய - புரட்டாசி - 2014 - செப்டம்பர் இதழ் - 27

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்

# இறை வணக்கம்




## திருநெல்லை துதி

பன்மணி மிடைந்து நவமணி குயிற்றிப்
　　பண்ணிய கோயில் பவமதை அறுக்கும்
　　பவளவாய்ச் செல்வி பரமனார் இடமுறை
　　பங்கயச் செங்கண் அங்கயற் கண்ணி
மின்னிடை இவண்திரு நெல்லை எனவரு
　　மெல்லியல் கழனி நகரிது புரந்து
　　மேன்மைகொள் தவத்தர் பற்பலர்க் கருளி
　　மின்மீன் துள்ளிடு மதுநதி பரவி
இன்னிசை வண்டு தன்னிசை கலந்தே
　　இலங்கிய கொற்ற வாளிறை தம்மின்
　　இருசெவிக் கமுதம் எனத்தினம் வழங்க
　　இமயப்பெருமலை எனத்திகழ் வன்னிப்
பொன்னகர் மேவிய கன்னியும் கயிலைப்
　　பொருப்புறை வானும் இருந்தருள் புரியும்
　　பூவனத் துறையும் புனிதமாக் கடவுள்
　　பூவடி பணிவோம் புண்ணியம் அதுவே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

### விரதங்கள்

பக்திநெறி ஆன்மீக முன்னேற்றம் அடைவதற்கு மற்றுமொரு சாதனம் விரதங்கள். ஆன்மீகப் பயிற்சியாளர்கள் தம்முடைய மனதையும், உடலையும் தெளிவாக வைத்துக் கொள்வது மிக்க அவசியமாகும். மனதைத் தெளிவுபடுத்தவும், விரதங்கள் அதிக அளவிலே உதவிகள் செய்யக்கூடும். எல்லாச் சமயங்களும் தத்துவங்களும் விரதக் கொள்கைகளையும் பயன்பாட்டினையும் ஒப்புக் கொள்கின்றன. சமுதாய முன்னேற்றத்திற்குப் பலவகையான விரதங்களைப் பரிந்துரைக்கின்றன. உண்ணாநோன்பு, பேசா நோன்பு, புலால் அருந்தா நோன்புகள், களவு , கொலை இவைகளை மறுக்கின்ற விரதம் எனப் பலவகையான விரதங்கள் உள்ளன.

இந்து சமயத்தில் வரலட்சுமி விரதம், சஷ்டி விரதம், காரடையான் நோன்பு, வடஇந்தியப் பகுதியிலே கணவன் நலத்திற்கு, பெற்றோர் சகோதர நலத்திற்கு எனப் பல விரதங்கள் பெண்களாலும், ஆண்களாலும் கடைப்பிடிக்கப்படுகின்றன. கார்த்திகை நோன்பு, சனிக்கிழமை விரதம், அமாவாசை விரதம் என்று பல விரதங்களும் கடைப்பிடிக்கப்படுகின்றன.

கிறிஸ்தவர்கள் ஈஸ்டர் நோன்பு, முகமதியர்கள் ரம்ஜான் நோன்பு என்று விரதங்களைக் கடைப்பிடிக்கின்றார்கள்.

விரத நெறிகளிலே சமணர்களும், பௌத்தர்களும் மிகக் கடுமையான விரத முறைகளையும், சட்டங்களையும் கடைப் பிடிக்கின்றனர். தன்னைவருத்திக் கொள்வது என்பது சமணர்களின் சித்தாந்தங்களில் ஒன்று. தன்னை வருத்திக் கொள்ளத்தக்க கடுமையான விரதங்களைச் சமணர்களும், பௌத்தர்களும் கடைப் பிடிக்கின்றனர்.

இந்த விரதங்களைக் கடைப்பிடிக்கின்ற அந்தக்காலக் கட்டத்திலே உடல், உணவுக் கட்டுப்பாடு, மனத் தெளிவு அனைத்தும் உண்டாகும். இறைச் சிந்தனை பெருகிவளரும். சபலங்களை எதிர்க்கின்ற மனோதிடம் வளரும். அதனாலே வைராக்கியம் வளரும், விரதம் என்றால் தவம் என்னும் பொருள்படும். இந்தப் பொருள் கொண்டே புத்தரை 'மகாவிரதி' என்று அழைக்கின்றோம்.

மகாபாரதத்திலே தன்னுடைய தந்தையின் ஆசைகளை நிறைவேற்றத் தன்னுடைய இன்பங்களைத் துறந்து தீவிர பிரம்மச்சர்யத்தை மேற்கொண்டார் பீஷ்மர். 'பீஷ்மர்' என்பதற்கு, கடுமையான விரதம் மேற்கொண்டவர் என்று பொருள் கொள்கின்றனர். ஐம்புலன்களின் முயற்சியால் தவம் இருந்து தொடர்ந்து வந்த நிலையிலே எமதர்மன் அவர் அழைக்கின்ற வரையிலே பீஷ்மரை நெருங்க இயலாத வரத்தைப் பெற்றார்.

விரதங்களைக் கடைப்பிடிப்பதற்கு முக்கியமான நோக்கங்கள் உடல் செயல்பாடுகளை ஒழுங்கு செய்வதும், வைராக்கியத்தை உண்டு பண்ணுவதும் சபலங்களை நெருங்க ஒட்டாமல் விலக்குவதும், மனத் தெளிவை அளித்து இறைச் சிந்தனையில் மனதை ஆழ்த்துவதுமே.

இதனாலே நம்மைப் போன்றவர்கள் குறைந்தபட்சம் மாதம் ஒருமுறை உண்ணாவிரதமும், பேசாவிரதமும் பழகலாம்; முன்னேற்றம் கண்டால் வாரம் ஒரு நாளாக ஆக்கி, பயிற்சியைப் பெருக்கிக் கொள்ளலாம்.

முயற்சி செய்வோமாக !

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

# மடாலய நிகழ்வுகள்

15.8.2014 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் மேனிலைப்பள்ளி வளாகத்தில் சுதந்திரதின விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. நற்கதை நம்பி டாக்டர் அய்க்கண் தேசியக்கொடியை ஏற்றி வைத்துச் சுதந்திர தின விழாச் சிறப்புரை நிகழ்த்தினார். சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலை நிறுவனங்கள் அனைத்திலும் பணிபுரியும் முதல்வர்கள், தலைமை ஆசிரியர்கள், .பேராசிரியர்கள், ஆசிரியர்கள், ஆசிரியரல்லாத பணியாளர்கள் அனைவரும் விழாவில் கலந்து கொண்டனர். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் கல்வி நிறுவனங்களில் பயிலும் மாணவர்கள் அனைவர்க்கும் ஆசியுரையுடன் இனிப்பும் வழங்கிச் சிறப்பித்தார்கள்.

7.09.2014 அன்று வெங்கடாஜல ஐயா குருபூசையும், 8.9.2014 அன்று மதுரை குட்டைய சுவாமி குருபூஜையும் சிறப்புடன் நடைபெற்றன.

11.09.2014 அன்று பாரதி நினைவு நாள் முத்துராமலிங்க ஆண்டவர் நர்சரி மற்றும் பிரைமரி பள்ளி சார்பிலும் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக்குலேசன் மேனிலைப் பள்ளி சார்பிலும் பாரதி விழாவாகக் கொண்டாடப் பெற்றது. விழா நாளுக்கு முன்னதாக இப்பள்ளிகளில் பயிலும் மாணவர்களுக்குப் பாரதியார் பாடல்கள் ஒப்புவித்தல் போட்டி நிகழ்த்தப் பெற்றது. விழா நாளில் காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் சே. செந்தமிழ்ப் பாவை, பாரதி பற்றிச் சொற்பொழிவாற்றியதோடு ஒப்புவித்தல் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்குப் பரிசுகளை வழங்கிச் சிறப்பித்தார்.

கோவிலூர் ஆதீனம் சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலையில் நடைபெற்ற இவ்விழாவில் மெட்ரிகுலேசன் மேனிலைப் பள்ளி முதல்வர் வரவேற்புரை நிகழ்த்தினார். நர்சரி பள்ளி ஆசிரியை கௌரி நன்றியுரை கூற நாட்டுப்பண்ணுடன் நிகழ்ச்சி இனிதே நிறைவுற்றது. அன்று பிற்பகல் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் பாரதி விழா கொண்டாடப் பட்டது. டாக்டர் சே. செந்தமிழ்ப் பாவை சிறப்புரையாற்றினார். கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுரை வழங்கினார். கல்லூரி

முதல்வர் டாக்டர் சே. குமரப்பன் தலைமை உரை நிகழ்த்தினார். தமிழ்த்துறைத் தலைவர் ம. கார்மேகம் அறிமுக உரை ஆற்றினார். மாணவி நவலெட்சுமி வரவேற்புரையுடன் நிகழ்ச்சி நடந்தது. மாணவர்கள் நவலெட்சுமி, கௌசல்யா, இலக்கியா, ராஜபாண்டியன், வெள்ளைச்சாமி ஆகியோர் பாரதியார் பற்றிக் கவிதைகள் வாசித்தும் சொற்பொழிவாற்றியும் சிறப்பித்தனர். மாணவி உமையாள் நன்றி கூறினார். மாணவி ஹேமலதா நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார்.

13.09.2014 அன்று சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலை நடத்தும் கல்வி நிறுவனங்கள் சார்பில் ஆசிரியர் தின விழா நடைபெற்றது. முற்பகலில் ஆசிரியர்கள் மற்றும் அலுவலர்களுக்குப் பல்வேறு போட்டிகள் நடைபெற்றன. பிற்பகல் 2.30 மணி அளவில் பாராட்டு விழா நிகழ்ந்தது. அழகப்பா மாதிரி மேனிலைப் பள்ளியின் மேனாள் தலைமை ஆசிரியர் திரு. வில்லியம் துரைராஜ், SMSV மேனிலைப் பள்ளியின் மேனாள் தலைமை ஆசிரியர் திரு. SP.பழனிவேல், மு.வி. மேனிலைப் பள்ளியின் மேனாள் தலைமை ஆசிரியர் திரு. வேணுகோபால் ஆகிய சிறந்த கல்வியாளர்கள் பாராட்டிச் சிறப்பிக்கப் பெற்றார்கள். காப்பியக் கவிஞர் நா. மீனவன், கவிஞர். முத்து சண்முகம், ஓவியர் திரு. கணேசன், கவிஞர் முனைவர் தேவி நாச்சியப்பன் ஆகியோர் பொன்னாடை அணிவித்துச் சிறப்பிக்கப் பெற்றனர்.

கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமை உரையோடு ஆசியுரையும் வழங்கினார். நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி ஆங்கிலத் துறைத் தலைவர் பேராசிரியர் V. பாலசந்திரன் மற்றும் நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் த. உதயசீலன் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். பாராட்டுப் பெற்ற கல்வியாளர்கள் ஏற்புரையாகத் தங்கள் அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டனர். மெட்ரிக்குலேசன் மேனிலைப் பள்ளி முதல்வர் திருமதி. மணிமொழி மோகன் அனைவரையும் வரவேற்றார். நிகழ்ச்சியின் நிறைவாக நர்சரி மற்றும் பிரைமரி பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி எல். மணிமொழி நன்றி கூற நாட்டுப்பண்ணுடன் விழா இனிதே நிறைவுற்றது. விழாவில் அனைத்து நிறுவனங்களையும் சார்ந்த ஆசிரியர்கள் அலுவலர்கள் அனைவரும் கலந்து கொண்டனர்.

தவத்திரு குமார தேவர் அருளிய

# மகாராஜா துறவு

## முகவுரை

இந்த நூலின் ஆசிரியர் குமாரதேவர். இவர் கன்னட தேச அரசராயிருந்தார். வீர சைவ நெறியினர். நல்விவேகம் தோன்றப்பெற்று, அனைத்தையும் விட்டு, ஞானாசிரியரைத் தேடிப் பல இடங்களுக்கும் சென்றார். அப்போது, திருப்பேரூரிலிருந்த சாந்தலிங்க சுவாமிகளின் கீர்த்தியைக் கேள்விப்பட்டு, அவரைத் தரிசிக்க விரும்பிச் சென்று வணங்கினார். இவரே நம்மை உய்விக்க வந்த இறைவன் எனக் கருதித் தம்மையும் அடிமை கொள்ளுமாறு விண்ணப்பித்தார்.

குமார தேவரின் பக்குவம் உணர்ந்த சாந்தலிங்க சுவாமிகள், அவரைப் புல் அறுக்கும் தொண்டினைச் செய்யப் பணித்தார். அரசரான குமாரதேவர் அத்தகைய வேலை செய்ததில்லையாயினும், குருவின் ஆணையைப் பாக்கியமெனக் கருதிச் செய்யத் தொடங்கினார். குருவிடம் பய பக்தியுடனும் மௌனத்துடனும் இருந்தார். குருவானவர் கருணை கூர்ந்து, குமாரதேவரைத் தம் அடியார் கூட்டத்துடன் சேர்த்துக்கொண்டார். சில நாட்களில், பாலனின் பசி கண்ட தாய் போல, குமாரதேவருக்குத் தீட்சையும் ஞான உபதேசமும் செய்வித்தார். அது முதல், குமாரதேவரும் தெளிந்து, சமாதி கூடியிருப்பதை அறிந்த குருவானவர், 'அன்ப' நீ விரும்பிய புண்ணியத் தலம் சேர்ந்து இருப்பாயாக என உரைத்தருளினார்.

குமாரதேவர் விருத்தாச்சலம் சேர்ந்து, அங்கு ஓர் அரசமரத்தடியில் இருந்தபோது, உலக மாதாவான பெரியநாயகி அம்மை, ஒரு சிறுமியாக அவர்முன் தோன்றி, ஆலயத்திலிருந்து கொண்டுவந்த பாலை அருந்தக் கொடுத்து, நீ இத்தலத்தே வைகுவாய் எனக்கூறி மறைந்தாள். சுவாமிகளும், இச்சிறுமி பெரிய நாயகி அம்மையே என உணர்ந்து, அங்கேயே தங்கித் தேவியைத் துதித்துக் கொண்டிருந்தார். அச்சமயம், அரச மரத்திலிருந்த பிசாசின் சாபத்தை

நிவர்த்தி செய்தல், அவ்வூர்ப் பத்திரகாளியை வசம் செய்ய வந்த மந்திரவாதியை விரட்டுதல் போன்ற திருவிளையாடல்களையும் செய்தார்.

குமாரதேவரின் பெருமையறிந்த சிதம்பர கவிராஜர் எனும் ஆசிரியர் அவருக்கு அடிமையானார். குமார தேவரும், தம் குருவான சாந்தலிங்க சுவாமிகளைத் தரிசிக்க வேண்டித் திருப்பேரூர் சென்ற போது, சிதம்பர கவிராஜரையும் உடன் அழைத்துச்சென்றார். இருவரும் சாந்தலிங்க சுவாமிகளை வணங்கிய போது, சிதம்பர கவிராஜரைத் தம் குருவின் அருள் நோக்கிற்குப் பாத்திரமாக்க விரும்பிய குமாரதேவர், 'இவர் தங்களுடன் இருக்கலாமே' என, சாந்தலிங்க சுவாமிகளிடம், விண்ணப்பித்தார். சாந்தலிங்க சுவாமிகளும், நமக்குச் சந்ததிகள் உள்ளதால், இவனை நீயே அழைத்துச் சென்று, உனக்கு யாம் உரைத்ததை உபதேசிப்பாயாக என அருளினார். குமாரதேவரும், சிதம்பர கவிராஜருடன் விருத்தாசலம் திரும்பி, அவருக்கு உபதேசம் செய்து அருளினார். சிதம்பர கவிராஜர், பிற்காலத்து, சிதம்பர சுவாமிகளாக அறியப்பட்டார்.

பெரிய நாயகி அம்மையின் அருளால், குமார தேவர் பதினாறு சாத்திரங்களையும், பெரிய நாயகி அம்மன் பதிகத்தையும் செய்து முடித்தார்.

குமாரதேவரது நூல்களுள் முதன்மையானது மகாராஜா துறவு ஆகும். இந்நூல் துறவறத்தை வற்புறுத்திக் கூறி, சீவாத்ம பரமாத்ம ஐக்கியத்தைத் தெளிவிப்பது. வேதாந்த சாஸ்திரங்களின் கருத்துக்களை எல்லாம் திரட்டிக் கூறி அத்வைத உண்மையை நன்கு விளக்குவது.

இந்நூல் கோவிலூர்த் திருமடத்தில் ஆரம்பம் முதல் பாட நூலாக அச்சிடப்பட்டு வந்துள்ளது. இந்நூல் வெளிவர முதல் காரணமாக இருந்த விருத்தாச்சலத்திலுள்ள திருமுதுகுன்றம் குமாரதேவர் திருமடத்திற்கு எங்கள் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## கடவுள் வாழ்த்து

### கணபதி முதலிய ஐவர் துதி

அமரர்கள் பரவும் திருமுது குன்றில்
ஆழத்துப் பிள்ளையைச் சிகரிக்
குமரசற் குருவை இமகிரி ராஜ
குமரியாம் பெரியநா யகியை
மும்மலமும் ஒருங்கே அகற்றிடும் முக்கண்
முதல்வனைச் சாந்தநா யகனை
நமதுஎணப் படியே முடிந்திடத் தினமும்
நாடிநின்று இறைஞ்சிவாழ்த் திடுவாம்.

நம் எண்ணப்படி இந்நூல் இனிதே முடியும் பொருட்டு, தேவர்கள் வந்து வணங்கும் அழகிய திருமுது குன்றில் எழுந்தருளி உள்ள ஆழத்துப் பிள்ளையாரையும், அப்பதியின் கோபுரத்தின் அருகில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளாகிய சற் குருவையும், மேருமலை அரசனின் புதல்வியாகிய பெரிய நாயகியையும், ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையும் ஒருங்கே நீக்கி அருளும் மூன்று கண்களை உடைய பழமலை நாதரையும் சாந்தலிங்க சுவாமிகளையும் நாடி வணங்கி நாம் வாழ்த்துவோம்.

### மூன்று குருமூர்த்திகள் வணக்கம்

மறைமுடிவு அதனில் விளங்கிடும் ஒளியே
மனிதரைப் போலவந்து எனது
சிறைதவிர்த்து ஆண்ட சிவப்பிர காச
தேசிகன் தன்மைமற்று அவன்தன்
நறைமலர் அடியைப் போற்றிடும் சாந்த
நாயகன் தன்னைமற்று அவன்தன்
நிறையருள் பெற்ற பழனிமா முனியை
நெஞ்சினுள் இருத்தியே பணிவோம்.

வேத முடிவில் விளங்கும் ஒளிமயமான கடவுளே, மானிடர் போன்ற வடிவுடன் வந்து தோன்றி என் பாச பந்தத்தை நீக்கி என்னை ஆட்கொண்டு அருளிய சிவப்பிரகாசன் என்னும் குருவையும்

அவருடைய மணம் பொருந்திய தாமரை மலர் போன்ற பாதங்களை வணங்கும் சாந்த நாயகன் என்ற சாந்தலிங்க சுவாமியையும், பின்னர் அவனுடைய பேரருள் பெற்ற பழனி சுவாமியையும் மனத்தில் நிலைத்து இருக்கச் செய்து பணிவோம்.

## ஆழத்துப் பிள்ளையார் துதி

தொய்யின் முலைக்கோடு இரண்டுகவான்
துதிக்கை மூன்றுவிழி துரிசுஇல்
துய்ய சைவ முதல்மதமும்
துலங்க வரும்ஒண் பிடி உலகம்
உய்ய உதவும் ஒருகளிற்றை
உலவா விருத்த சைலத்தில்
வையம் பரவும் ஆழத்து
வாழ்ஐங் கரனை மனம்நினைவாம்.

சந்தனக் குழம்பு கொண்ட கோலம் எழுதப் பெற்ற இரு தனங்களும், தந்தங்களும், இரு துடைகளும், இரு கைகளும் துதிக்கை ஆகவும், மூன்று கண்களும், குற்றம் இல்லாத சைவம் என்னும் முதன்மை கொண்ட மதமும் ஒளிர வருகின்ற உமை என்ற பெண்யானை பெற்று எடுத்த ஒப்பற்ற யானை முகம் கொண்ட விநாயகப் பெருமானை, அழியாத விருத்தாசலம் என்னும் கோவிலில் உலகம் போற்ற ஆழத்திலே வாழ்கின்ற ஐந்து கரத்தானை மனத்தால் சிந்திப்போம்.

*(தொடரும்...)*

அட்டையில் : Dr. A.சிவதாணுப்பிள்ளை , "ஜெம்" வீரமணி , "பட்டர்பிளை" குழுமத்தின் தலைவர், V.M. லெட்சுமி நாராயணன், சாகித்ய அகாடமி பரிசு பெற்ற எழுத்தாளர் D. ஜெயகாந்தன், "ஹிந்து நாளிதழ்" தலைவர் N.ராம் மற்றும் டைரக்டர் மற்றும் தலைவர் G.K. மொய்னுதீன்

## அமர்நீதி நாயனாரின் அரன்சேவை

(புலவர் ஆறு.மெ. மெய்யாண்டவன், துணைப்பேராசிரியர், நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்)

ஞானம் ஒளிமயமானது. அஞ்ஞானம் இருள் மயமானது. ஒளி வழியிற்செல்வோர் துறக்கமும் (சொர்க்கம்) இருள்வழி செல்வோர் நரகமும் அடைவர் என்பது நம் சமய நம்பிக்கை. எனவே நல்வழியில் இயங்குவதே ஒளி வழி. அறிவொளி பெற வேண்டுமானால் மெய்யறிவு நூல்களைப் பயிலல் வேண்டும் என்பார் அருணகிரிநாதர், அந்த அறிவே நம்மை நீதி வழியில் செலுத்தும் என்கிறார் அவர். அத்திருப்புகழ் வரிகள் இதோ

ஆராயுநீதி வேலு மயிலுமெய்ஞ்
ஞான பிராம தாப வடிவமும்
ஆபாத னேனும் நானா நினைவது
பெற வேணும்

ஆராயும் நீதிவேலும் மயிலுமாகும், மெய்ஞ் ஞானப் பிரம வடிவமாய் இருக்கும் முருகனை அடையத்தகுதி இல்லாதவனானாலும் நான் ஞான நினைவது பெற வேண்டும் என்கிறார், வாழ்க்கையில் நீதிநெறி பிறழாமல் வாழ்ந்தவர்கள் அறுபத்துமூன்று நாயன்மார்களும் தொகை படியார்களும் என்பதைப் பெரியபுராணத்தில் சேக்கிழார் தெளிவுதர மொழிகின்றார்.

குறிக்கோள் இல்லாத நாயன்மார்கள் எவரும் இலர், அத்தகு சிறப்புமிகு நாயனார்களுள் ஒருவர் அமர் நீதி நாயனார், நீதி இவரை விரும்பித் தங்கியதால் இவர் அமர்நீதி ஆனார், அமர்தல் விரும்புதல் எனப் பொருள் தரும் சொல். இவர் வரலாறு கோவணத்தின் பெருமையை விளக்குவதாகும்.

சிறப்புமிக்க சோழவளநாட்டில் வளம்குன்றாது விளங்கும் பதி பழையாறை. பொன்னி நதிபாயும் செம்பியராம் சோழர் ஆளும் நாடு, வண்டுகளில் ஒருவகை எல்லாவற்றிலும் அமரும், ஆனால் கரியநிறவண்டோ தேனைத்தவிர வேறொன்றையும் நாடாது.

பழையாறைப் பதி கரிய வண்டுகள் தேனுண்டு மகிழ்ந்து இசைபாடும் இனிய பூஞ்சோலைகளாய்த் திகழ்கின்றன, செழுமணித்தேரோடும் திருவீதிகள் கொண்டது அத்திருத்தலம்.இச்செய்தியைச் சேக்கிழார் கூறும் திறம் சிந்தித்தற் குரியது.

சீரில் நெடிய செம்பியர்
பொன்னி நன்னாட்டுக்
காரின் மேவிய களிஅளி
மலர்ப் பொழில் சூழ்ந்து
தேரின் மேவிய செழுமணி
வீதிகள் சிறந்து
பாரில் நீடிய பெருமைசேர்
பதி பழை யாறை.

சிவமணம் கமழும் பழையாறைத் திருத்தலத்தில் அமர்நீதியார் தோன்றியருளினார். வணிகர்குலச் செம்மல் இவர், தம்குலப் பெருமை குன்றாது வாணிகம் செய்து வாழ்ந்தார், பல பல தேசத்துப் பொருள்களை நிரம்பவருவித்து, ஒருபுறத்தில் குவித்து, குறைந்த ஊதியத்தில் விற்று, ஒரு சிறிதும் மாறுபாடின்றிச் செய்யும் வாணிகத்தால் மக்கட்கு மிகப்பெரிய நன்மைகிட்டும்,

"வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்" என்பார் திருவள்ளுவர்.

அமர்நீதி நாயனார் சிவன்கழலவே சிந்திப்பவர். அந்திவண்ணமாம் செந்நிறமேனியுடைய சிவபெருமான் அடியவர்க்கு உணவாம் அமிழ்து செய்வித்து ஆடையும் கோவணமும் தந்து ஈந்துவக்கும் இன்பத்தை அனுபவித்து வந்தார்

சிந்தை செய்வது சிவன் கழல்
அல்ல தொன்றில் லா
அந்தி வண்ணர்தம் அடியவர்க்
கமுது செய்வித்துக்

கந்தை கீளுடை கோவணம்
கருத்தறிந்துதவி
வந்த செல்வத்தின் வளத்தினால்
வரும் பயன் கொள்வார்,

எனச் சேக்கிழார் தம் தீந்தமிழ்ச் சொற்களால் அமர்நீதியார் தொண்டை அழகுற விளக்குவார். பழையாறைக் கருகில் உள்ள சிவத்திருத்தலம் திருநல்லூர். அப்பர் பெருமானுக்கு முக்கட் பரமர் திருவடி சூட்டிய அருமையான தலம் இது. திருநல்லூர் திருவிழாச் சமயங்களில் அமர்நீதி அங்குச் செல்வது வழக்கம். பழையாறையிலிருந்து திருநல்லூர்க்குச் சென்று சென்று இறைவனைத் தரிசிப்பதை விடத் திருநல்லூரிலேயே அமர்நீதி தங்க நினைத்து அங்கே திருமடம் ஒன்று அமைத்தார். சிவனடியார்களுக்கு அமுது செய்யும் பொருட்டுத் திருமடத்திலேயே தங்கித் தொண்டு புரியலானார்.

பிரம்மசரியத்தின் பெருமையை உணர்த்தும் கோவணத்தின் பெருமையையும் அமர்நீதி நாயனாரின் அன்புத்திறத்தையும் உலகத்தினர்க்கு வெளிப்படுத்தி ஆட்கொள்ள முக்கண் முதல்வன் திருவுளம் கொண்டார்.

பிரம்மசாரி வடிவம் தாங்கி வந்தார் இறைவர். ஆண்டவனைக்காண அடியவர் வருவர். ஆனால் அடியவராம் அமர்நீதியாரைக்காண அம்பலக் கூத்தன் வந்தார். எப்படி வந்தார்? அழகிய சிகைகூடிய சடை மூன்றுவரியுடன் பச்சைத்தருப்பையாற் செய்த பவித்திரம், மார்பில் முப்புரி நூல், நாணற்புல்லால் முறுக்கிய அரைஞாண் வண்மையான கோவணம், அறிவொளி இலங்கும் திருமுகம், கருணை சிந்தும் கண்கள், சிவந்த திருமேனி, அமைதியானதோற்றம், இத்தகு கோலங்களைக் கொண்டு தொண்டராம் அமர்நீதி திருத்தொண்டை அகிலத்துக்கு உணர்த்த, திருவடிகள் மண்ணில் தோய நடந்து வந்தார். அவ்வாறு வரும் இறைவனின் இருகோவணங்களும், திருநீற்றுப்பையும், தருப்பையும் தாங்கிய தண்டும் கண்ட அமர்நீதி நாயனார் அகமும் முகமும்

மலர்ந்தன. இதைச் சேக்கிழார் விளக்கும் விதம் சுவைதும்பும் தன்மையுடையது

கண்டவர்க் குறு காதலின்
மனங் கரைந்து ருகத்
தொண்டர் அன்பெனும் தூநெறி
வெளிப் படுப் பாராய்த்
தண்டின் மீதிரு கோவணம்
நீற்றுப்பை தருப்பை
கொண்டு வந்(து) அமர்நீதியார்
திருமடம் குறுக,

அமர்நீதி நாயனார் இறைவன் எதிர்வந்து அவன் அடிமலர் வீழ்ந்தார், இதைச்சேக்கிழார் பின் வருமாறு விளக்குகிறார்.

வடிவுகாண்டலும் மனத்தினும் மிக முகமலர்ந்து
கடிது வந்தெதிர் வணங்கி இம் மடத்தினிற்காணும்
படியிலாத நீர் அணைய முன்பயில் தவம் என்னோ
அடியேன் செய்த(து) என்றனர் அமர்நீதி அன்பர்.

மனம் நினைக்கும் முன் முகம்மலர்ந்து தாங்கள் இங்குவர நான் செய்தவம் என்னவோ ? எனக் கூறிவணங்கினார், திருடமத்திற்கு அழைத்து வந்து பீடத்தின் மீதிருத்தி வழிபட்டார், எத்தனையோ அடியார்களைப் பார்த்துள்ளேன்; தங்கள் திருக்கோலத்தில் யாரையும் கண்டதில்லை, தாம் எம் திருமடத்தில் அமுது செய்திடல் வேண்டும் என அமர்நீதி நாயனார் சிவபிரானை இறைஞ்சினார்.

சிவபிரானும், அன்பனே! உன்னுடைய வள்ளன்மை எங்கும் பாராட்டப் படுவதை அறிந்தேன், அடியார்க்கு நிரம்ப உணவு அளித்து, கந்தை, கீளுடை, புதிய வெண்மையான கோவணம் முதலியன தருகின்றாய் எனக் கேள்வியுற்றோம், ஆதலின் உன்னைக் காண வந்தோம் என்றார்.

*தொடரும்....*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### III/01/04 உற்பத்திப் பிரகரணம் – ஞானவின்மகன் கதை

( முற்குறிப்பு : மொத்தம் 327 பாடல்களும், 8 கதைகளும் உடைய இப்பிரகரணத்தில் பிரபஞ்ச சிருஷ்டி (நாம் பல்வேறு உயிர்கள், உயிரற்றன, புவி, வளி, வெளி என யாவும் உண்டாக்கப்பட்டமை) பற்றிக் கூறப்படுகிறது. இதன் தத்துவ முன்னுரையாக, பாடல் எண் 01-13 அமைந்துள்ளது. பாடல் 22 வரை கதைப்பகுதியும், பாடல் 44 வரை தத்துவ விளக்கமும் அமைந்துள்ளன. இக்கதையில், காலன் என்பவரை, எமனுடைய பணியாளனாக வேறுபடுத்திக் காட்டப் பட்டுள்ளது.)

**கதைப்பகுதி:** பிறப்பிலேயே, ஞானத்தில் முழுமை பெற்றவனாக ஓர் அந்தணன் இருந்தான். ஞான வானத்தைச் சேர்ந்தவனாயினும், அவன் பருவுடல் பெற்று வாழ்ந்தான். அவனது முழுமையான ஞானம் காரணமாக, பிற உயிர்களிடத்துக் கருணையுடனும், நெறி தவறாதும், பிரிவற்ற சமாதிநிலை உடையவனாயும், வேறு செயல்களேதும் செய்யாதும் மிக நீண்டகாலம் வாழ்ந்திருந்தான்.

அனைத்து உயிர்களையும் விழுங்குதலே தொழிலாக உடைய காலன், அந்தணனைக் கவர்தற்கென அவன் வீட்டை அணுகினான். ஆனால்,அந்தணனின் ஞான வெப்பத்தால் தாக்குண்ட காலன், அந்தணனை நெருங்க இயலவில்லை. காலன், எமனிடம் சென்று, அந்தணனைக் கவராது விட்டமை பற்றியும், தனக்கென விதிக்கப்பட்ட கடமையை, நெறிப்படி செய்ய இயலாமை பற்றியும் கூறி வருந்தினான். அதற்கு எமன், காலனிடம்,

**"புவனம் கருமத் தால் அன்றிப் பொன்றா துஉதவிப் பொருளவையே**
**தவறும் படிசெய் கருமங்கள் சகாய மாகச் செல்கென்றான்"**

இப்புவனத்து அந்தணன் செய்த கருமங்கள் (செயல்கள்) வழியாக அவனைக் கவரலாம் என அறிந்து கொண்ட காலன், ஊர்கள்,



பட்டமேற்பு விழாவில் நாச்சியப்ப சுவாமிகள்



# தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகள் சிறுகுறிப்பு

நிறைந்த பொருளும், புகழும் சேர்ந்து கொண்டிருந்த காலத்திலே அவர்களுக்கு ஒரு மாற்று எண்ணம் தோன்றியது. மேலும் மேலும் பொருளைச் சேர்த்துச் செய்யப் போவது ஒன்றுமில்லை. சேர்த்த பொருளைப் பலருக்கும் பயன்படும் வகையாகத் தம்மால் இயன்ற வரை தர்மம் செய்வது என்ற கருத்து அவர்களுடைய மனதில் தோன்றியது. சுவாமிகளுடைய (CT.நாச்சியப்பன்) இயல்புப்படி உடனடியாகச் செயல்படத் தொடங்கினார்கள். தமிழ்நாட்டின் பாரம்பரியங்களையும், கலைகளையும் தன்னால் ஆன அளவிலே காப்பாற்ற முயலுவது என்று முடிவு செய்து "இந்தியத் தத்துவ ஆராய்ச்சி மையம் "(Indian Institute of Idiology)" என்ற அறநிலையை உருவாக்கினார்கள். அந்த அறநிலையத்தின் தொடக்க விழாவினைச் சென்னை மைலாப்பூரில் உள்ள சமஸ்க்ருதக் கல்லூரி வளாகத்திலே நடத்துவதற்கு ஏற்பாடு செய்தார்கள். அந்த விழாவிற்கும் வணக்கத்துக்குரிய காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜெயந்திர சரஸ்வதி சுவாமி அவர்களையும், கோவிலூர் ஆதீனம் 11ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ காசிவிஸ்வநாத சுவாமிகளையும் அழைத்திருந்தார்கள். இந்த விழா CT. நாச்சியப்பன் அவர்களின் வாழ்க்கையை முற்றிலுமாக மாற்றி அமைத்துவிட்டது. உயர்திரு. சித. நாச்சியப்பன் அவர்களை, கோவிலூர் மடாலயத்துடைய அடுத்த மடாதிபதியாக ஆக்கிவிட வேண்டும் என்ற எண்ணம் தெய்வத்திரு. காசிவிஸ்வநாத சுவாமிகள் மனதிலே தோன்றி வலுப் பெற்றுவிட்டது. அந்தவண்ணம் உயர்திரு. சித. நாச்சியப்பன் அவர்களைத் தமது அடுத்த வாரிசாக நினைத்து உயிலை எழுதி வைத்தார்கள். அதனால் திரு.சித. நாச்சியப்பன் அவர்கள் கோவிலூர் மடாதிபதியாகப் பொறுப்பேற்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு ஜீலை25, 1995ஆம் ஆண்டில் 12ஆவது ஆதீனமாகப் பொறுப்பேற்றார்கள். அதன் பின்னர்தான் கோவிலூர் மடாலயத்தின் இன்றைய வளர்ச்சி வரலாறு தொடர்கிறது.

இன்றைய அபரிமிதமான வளர்ச்சிக்கு ஆதாரமான தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகள் அவர்களை மனம், மெய், வாக்கு, அனைத்தாலும் போற் உளம் நிறைந்த நன்றியினைச் செலுத்துகிறோம்.

அக்டோபர் 1ஆம் தேதி புரட்டாசி 15ஆம் தேதி புதன்கிழமை மூல நட்சத்திரம் தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகளின் 3ஆவது குருபூஜை நடைபெற உள்ளது.

29.09.2014 திருமுறைமுற்றோதல்

30.09.2014 திருவாசகமுற்றோதல்

அன்பர்கள் அனைவரும் கலந்து கொண்டு குருவருளும், திருவருளும் பெற வேண்டும்.



ஸ்ரீலஸ்ரீ காசிவிஸ்வநாத சுவாமிகளுடன் சித. நாச்சியப்பன் அவர்கள்



காடுகள், ஆற்றங்கரை ஓடைகளெனப் பல்வாறாக அந்தணனின் பழம்வினைகளைத் தேடினேன். ஆனால், அந்தணனின் செயல் என எதுவுமே தெரியவில்லை. இவ்வந்தணனுக்கான கர்மா என எதுவுமே இல்லை என்பதை உறுதி செய்து கொண்ட காலன், மறுபடியும் எமனை அணுகி இதனைத் தெரியப்படுத்தினான். அதற்கு எமன்,

**"நிகரில் பரம ஆகாய நிமல வடிவாய் நிற்கின்ற**
**இகல்இல் அயனை அடர்தற்கென்று எண்ணும் எண்ணம் எளிதாமோ**
**திகழும் வெளியே வடிவாகிச் செறிந்த பூத வடிவிலனாய்ப்**
**புகல்சங் கற்ப புருடனைப்போல் பொன்றாது அயனும்**
**பொலிந்திடுமால்"**

(இகல்=பகை, அடர்தல்=கொல்லல், சங்கற்பம்=வலிவான எண்ணம், பொன்றாது=இறப்பின்றி) என காலனிடம் கூறினார்.

உடலோடிருப்பினும், உலகியல் கர்மா பொருந்தாதவனை இறப்பு நெருங்காது என்பதனை அறிந்துகொண்ட காலன், அந்தணனைக் கவராது விடுத்தான்.

தாங்கள் கூறிய கதையில் வரும் அந்தணன், பிரம்மனாகவே இருத்தல் வேண்டும் என இராகவர் கூற, வசிட்டரும், "அவ்வாறே" என்றார்.

**தத்துவப் பகுதி:** நாம் காணும் பிரபஞ்சம் எவ்வாறு உண்டாயிற்று தொடர்கிறது மற்றும் எவ்வாறு அழியும் என்பன விளக்கப்படுகின்றன. 'சித்'தாக ஒளிரும் ஆன்மா தானே அறியாது (விளையாட்டாக), அதன் சங்கற்பமான பிரம்மாவின் மனம் மூலமாக இப்பிரபஞ்சத்தை ஒருசேர (யுகபத் சிருஷ்டி) உண்டாக்கிற்று. (இவ்வாறு, படைப்பிற்கு மூல காரணம் என ஏதும் இல்லை.) ஞான சக்தியானது சீவ பாவம் பெற்று, நாம், நம் மனம், அகங்காரம், இயற்கை, என இது தொடர்கிறது. மனிதனின் பற்றுக் காரணத்தால், நீ, நான், உடல், பொருள், எண்ணங்கள் என விரிந்து, அவ்வவற்றிற்கான கர்மாவில் முடிகிறது. ஆனால் நம் எண்ணங்கள் அவித்தை (அறியாமை) ஆதலின் அதற்கான கர்மாக்களும் அறியாமையே. இந்த எண்ணங்களும், நம்

மனமுமே, 'நான் பிரம்மம்' என்பதை மறைப்பன. உடலெடுத்தவன் மட்டுமே கர்மா செய்ய இயலுவதால், அவ்வுடலைக் கவர்வதே அறமாக உடைய எமன் மூலமாகவே கர்மாபற்றிய உபதேசம் பெறப்படுகிறது. மனம் காரணமாக, நல்ல/தீய கர்மா செய்பவனுக்கு இறப்பு(காலன் கைப்படல்) உண்டு. ஆனால் மனதைச் சித்தத்தில் கரைத்துவிட்டு (செய்லற்று) ஒருவன் உடலோடிருப்பினும் அவனைக் காலன் நெருங்கான். இவ்வாறு, கர்மா அற்றவனைச் சிறப்பித்து, அவனுக்குப் பொதுவிதி (உடலுடையவனுக்கு இறப்பு உண்டு எனல்) பொருந்தாது எனப்படுகிறது. தன் வினைக்கேற்ப இறப்பு உண்டாகிறதே அன்றி, அதனைக் காலனின் விருப்பம் என நினைத்தல் தவறாகும். இக்கதையில் வரும் அந்தணன் ஞான வானத்துப் பிறந்தவனாதலால் அவனுக்குப் பழம் வினை(சஞ்சித கர்மா இல்லை. நிகழ்வினையாக (பிராரர்த்த கர்மா) எதுவுமே செய்யாத அவன், எதிர்வினையைச் (ஆகாமிய கர்மா) செய்வான் எனல் தகாது. இவ்வாறு, ஞானமுடையவனின் முன்னர் காலனின் அறம் (எமதர்மம்) நிற்க இயலாது.

இக்கதையில், இராகவர் வசிட்டரிடம் 5 கேள்விகள் கேட்கிறார். அவையாவன: (1) நமக்குப் பருவுடலும், பிரம்மனுக்கு சூட்சும உடலும் தரப்பட்டுள்ளது எதனால்? (2) மாயையை விரிவடையச் செய்யும் மனம் பற்றிய விளக்கம் யாது? (3) உண்டாக்கப்பட்டவை மறைந்தாக வேண்டுமாயின், பிரபஞ்சம் எதனுள் மறையும்? (4) உடலிறந்த வீடுபேறு (விதேக முக்தி) மற்றும் உடலிருந்த வீடுபேறு (சீவன் முக்தி) பற்றிக் கூறுக (5) பரவடிவானது (பிரம்மம்) உலகியலிலும் (வியவகாரிகம்) செயலற்ற நிலையிலும் (பாரமார்த்திகம்) எவ்வாறு இருக்கும்?

இவற்றிற்கு வசிட்டர் கீழ்க்கண்டவாறு மறுமொழி கூறினார்: (1) ஐம்பூதக் கலப்பால் (பஞ்சீகரணம்) பிறந்த நமக்குப் பருவுடல் உண்டு. நாமும், பிரம்மனும், உலகனைத்திற்கும் சூட்சும உடலும் உண்டு. (இவ்வாறு நமக்குப் பருவுடலும், சூட்சம உடலும் உண்டு) ஆனால் பிரம்மாவானவர் ஐம்பூதகாரணத்தால் பிறவாமையால் அவருக்குப் பருவுடல் இல்லை.(பருவுடல் இருப்பின் காலன் கைப்படவேண்டும்)

(2) மனம் பற்றி,

**“படர்தீர் மெய்பொய் எனும் பொருளில் பயில் தோற்றரவே மனமாகும் தொடர் சங்கற்பம் எங்குளதாம் தோன்றும் மனமும் அங்குளதே ”**

எனவும்,

**“மனத்தின் வடிவு சங்கற்பம் மற்றிவ் இரண்டும் ஒன்றாகும்**
**அனர்த்தம் மோகம் மலம்பந்தம் அவித்தை மாயை தமம் முதலாம்**
**இனத்த பெயர்சங் கற்பத்துக்கு ஏற்றபெயராம் இதுநழுவில்**
**கனத்த சகக்காட் சியும்போகும் கதிரிவிட்டு எறிக்கும் பரவடிவம்”**

எனவும்,

**“நிற்ப நடப்பஎனும் அனைத்தின் நிழல் ஆடாது வெறிதிருக்கும்**
**தற்பணந்தான் எப்படியோ தானே விளங்கும் அப்படியே”**

அம்மனம் நழுவினால் (ஒழிந்தால்) பிரம்மமாக விளங்குமெனவும் கூறினார்.

(3) காண்பவற்றுள் மிகப்பெரியது பிரபஞ்சம் (கோள்கள், விண்மீன்கள், புவி, வளி, வெளி என யாவும்) அதனை மறைக்கக்கூடிய மிகமிகப் பெரியது ஏதும் உண்டா என்பது கடுகினுள் மேரு மலை நுழைதற்கொப்பாகும். வசிட்டர் இதற்கு, “பிரபஞ்சத்தைப் பருப் பொருளாய்க் காணாது, அதன் சூட்சுமப் பொருளாக உணர வேண்டும்” (இது விதையினுள் ஆலமரம் அடங்கியதற்கு ஒப்பாகும்) என்றார்.

(4) சீவன் முக்தர் (உடல் இருக்க வீடுபேறு) இலக்கணமாக,

**“மிகவருகா மாதிகளாம் விகாரமடைந் தும்விண்போன் மிகநொய்தானோர்**
**அகமெனலின் றிச்செயல்கள் செய்தானுந் தவிர்ந்தானு மழுத்த மற்றோர்**
**சகநெறிகள் செய்திடினு மந்நியர்போற் கண்டுகுளிர் தன்மை சான்றோர்**
**திகழ்மனமு நினைவுமிருந் துஞ்சிறிதும் இல்லாதோர் சீவன் முக்தர்”**

எனவும்,

"துக்கசுகங் களில் அமிழ்ந்து மிதவாத புந்திநிலை
சுபாவமானோர்
புக்கசுழுத் தியின்நனவாய் நனவின்றி வாதனைதீர் போத
முற்றோர்
மிக்கசம மாயுலகால் வெருளாமல் உலகினையும் வெருட்டா
மேலோர்
சிக்கறநன் நினைவிருந்து நினைவிலா தவர் இவரே
சீவன் முக்தர் "

(காமாதி=ஆசை தொடங்கிய மற்றவை, விகாரம் = மாறுபாடு, நொய்தானோர் = தெளிந்தோர், மிதவாதம் = நடுநிலை, வாதனை = பழம், பதிவுகள் (வாசனை), போதம் = உணர்வு, வெருளல் = அஞ்சுதல், வெருட்டல் = அச்சமடைவித்தல்) எனக் கூறியுள்ளார்.
உடலிறந்த வீடுபேறு (விதேகமுக்தி) என்பதை "சொற்களால் விளக்க முடியாத பரவடிவாக ஆவாய்" எனுங்கருத்தில்,

"தொலையாது மறையாது தோன்றாது நணித்தல்ல தூரத்தல்ல
உலையாது முடியாது நானல்ல பிறனல்ல ஒன்றுமல்ல" எனவும்
"இருளன்றி ஒளியன்றி அளவன்றி அலைவின்றி இயல்பு
ஒன்றின்றி
பொருகின்ற பூதங்கள் பலபொருள்கள் அன்றி நிறை புரணமாகி
உருவன்றி அருவன்றி உளதன்றி உண்டில்லை அன்றி ஒன்றாய்
வருகின்ற திரிபுடியின் நடுத்தோன்றும் மறவாது மதித்துக்
கொள்வாய்,"

என விளக்கினார் (நணித்து: அருகே, உலையாது=இருப்பு அல்ல, திரிபுடியின் நடு= காட்சி, காண்பான், காணுதல் எனும் மூன்றுக்கும் நடுப்பட்டது).
(5) நாம், நம்மனம், மற்ற உயிர்களென, உலகியலில் செயல் படுவனவெல்லாம், பிரம்மத்திற்கு வியவகாரிகமாகும்.
ஆனால் உலகம் தோற்றம் மட்டுமே என்பதால், இப்பரமார்த்திக வியவகாரிகமும் தோற்றமே. இதனை,

"பருத்ததொழில் செய்யினும்கல் போலிருக்கும் நிலையதுவாய்ப்
பகரலாகும்"

எனக் கூறுகிறார். அதுவே செயலற்ற நிலையில்,

**“திடவிசும்பன் றாயிருந்தும் விசும்பான நிலையதுவாம் சித்தம் புத்தி
படர்மனம் போய்த் தாவரம்போல் பெறும் உள் அறிவு ஒப்பாம்
அப்பரமரூபம்”**

எனக் கூறுகிறார். பேரழிவு (பிரளயம்) போன்ற மிகப்பெரிய தொழில் முடிவுற்றபின்னும், அதுமட்டும் அசையாத கல்போல (சாட்சியாக) நிற்கும் என்பதனை,

**“அயனொடுமால் சங்கரனும் சதாசிவனும் இந்திரனும் அருக்கன் தானும்
வியனில் உபசாந்தராம் வேலையினில் உபாதியெலாம் விட்டு நீங்கிப்
பயனில்சகம் என்கின்ற பற்றகன்று சின்மயமாம் பரமரூபம்
உயர்விகற்பம் இலாவடிவாய் எங்கும் நிறை சிவமாகி ஒன்றாய் நிற்கும்”**

என விளக்கியுள்ளார். (உபாதி = (இங்கு) வெவ்வேறு தொழிலுக்கான வேடம்).

**(பிற்குறிப்பு:** நாம் செயல்படும்போது, நல்வினை/தீவினைகளுக்குக் காரணமாகிறோம். இவை நமக்குப் புண்ணிய/பாவப் பலன்களைத் தருவன. தீவினைப் பலனை, நல்வினையால் சமன்செய்ய இயலாது. இவை ஒவ்வொன்றையும் நாம் அனுபவித்துத் தீர்க்க வென, இறப்பு மறுபடிபிறப்பு, எனப் பல சுற்றுக்களை எதிர்கொள்ள வேண்டும். காலனின் கைப்படாத நிலையடைந்தவனுக்கு இத்துன்பம் இல்லை எனவும் அதற்கு நாம் எவ்வாறு இருக்க வேண்டும் எனவும் இக்கதை கூறுகிறது.

இதில் கூறப்பட்டுள்ள தத்துவப் பகுதியில், பிரபஞ்ச ஆக்கல் பற்றிய குறிப்பு (யுகபத் சிருஷ்டி), ஒருசேர ஒரே பாதியில் ஆக்கப்பட்டமையைக் கூறுகிறது. வேறு இடத்து, உபநிடதமே (பிரமாணம்) ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றியது எனும் கிரம சிருஷ்டியை ஏற்கிறது. எதிர்மறையான இவ்விரண்டும் எவ்வாறு ஏற்புடையதாகும் என்பதற்கு விளக்கமாக, “பிரம்மத்தைத் தன் உள்ளுணர்வாகவே (அபரோட்ச ஞானம்) உணரத் தேவையான மிக முக்கியமானவையாக இல்லாதவற்றில் கூறப் படும் விளக்க வேறுபாடுகளை, உபச்சார வார்த்தைகள் (பெருமைப்படுத்திக் கூறல்) எனக் கொள்ளலாம்” எனும் ஆதிசங்கரர் கூற்றுப் பொருந்துகிறது.)

*தொடரும்....*

# கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

## நைமிசப் படலம்

வரையில் நின்றுசெம் மணியும்வெள் வயிரமும் வரன்றி
விரைவின் மல்குசந்(து) அகில்பல வேரொடும் பறித்துத்
திரைகொ ணர்ந்துவந்(து) எறிதரும் தெய்வதக் கங்கைக்
கரையில் மன்னிய(து) உயர்பெரு நைமிசக் கானம் 1

வளரி லாங்கவி கால்களா வானம்மேற் பரப்பா
விளரின் மேகம்மேல் கட்டியா இந்திர வில்ஏர்
கிளரும் வாயிலாப் பன்மரம் கெழுமிய அணியாத்
தளர்(வு)இ லாத(து)ஓர் காவணம் பொருவும்அத் தருகான் 2

மன்னு தெங்கின்ஒண் காய்க்குலைக் கிழக்குமா வதிவ
முன்னும் அத்தகு தெங்கருள் முப்புடைக் காய்க்குப்
பன்னு தன்னுடைப் பா(சு)இலை பாசனம் ஆகித்
துன்னு தன்மையை முன்னரே புரிதிறம் துணையும் 3

மான்ற நெஞ்சம்இன் மாதவர் அண்ணலுக்(கு) ஆட்ட
ஆன்ற நூல்வரி தபனமங் கைக்கொளல் காணூஉத்
தோன்ற மாதுளங் கனிமிசைச் சிலம்பிநூல் சுற்றிக்
கான்ற மாஇலை செரீஇடுப் பனமுது கவியே 4

நிலவும் தென்றலும் கூவுகோ கிலங்களும் நிறையுற்(று)
உலவும் வண்டுஅருந்து வற்றுதே மலரும்மற்(று) உலவும்
கலவு மாயினும் மாதவர்க்(கு) இயற்றில காமம்
குலவு நீர்தரு நிலத்தின்வே(று) உறுநிறம் கொளுமோ 5

அங்கு மேவிய மாதவர் கற்பகம் அளிக்கும்
பொங்கு தீஞ்சுவைக் கனியும்புத் தமுதமும் வெறுத்தல்
எங்கு நாடியும் இத்தகு வனத்திடை என்றும்
தங்கு காய்கனி போல்அமை யாமையில் தானே. 6

புனித நாயகன் உமையொடு பொலிந்(து)இனி(து) உறலால்
இனிய மால்அயன் முதலியர் சூழ்தலால் என்றும்
தனிஅ வாவுமா முனிவரர் சார்தலால் அள(வு)இல்
கனிஅ ளாவிய நைமிசம் கைலையை நிகர்க்கும் 7

அரசு பாடலம் வன்னிபுன் னாகம்மா அகிலால்
புரசு வேய்கடம்(பு) ஆர்குருந்(து) இலந்தைபொன் கொன்றை
பரசு நாவல்க ளாவிளா பலாமுதல் பலவும்
விரசும் ஒவ்வொரு தலம்குறித் திடஅவண் மிடையும் 8

அடைய டுத்தகான் நீருண்டு தோல்உடை அமைந்து
புடைவி ளங்கிட மலர்அமை பொடிநனி பூசித்
தொடைசெய் வண்(டு)எனும் கண்மணி மாலிகை சூடிச்
சடைஅ மைந்துமா முனிவரில் பொலிவபல் தருவும் 9

சிவபி ரானொடு மாறுகொள் கறையடி சீயம்
தவல்இல் வெம்புலி நவ்விவெஞ் சர்ப்பமுற் பலவும்
உவமை தீர்முனி வரர்பணி விடைபுரிந்(து) உவக்கும்
அவனி லும்அவன் அடியர்மேல் எனல்குறித்(து) அன்றோ 10

## வேறு

இன்னபல் வளத்த நைமிச வனத்தில்
இருப்பவர் பொருப்(பு)இறை உயிர்த்த
அன்னம்மென் நடையாள் ஒருபுறத்(து)அமர
அமைத்தவன் அடிமலர்க்(கு) அன்பு
துன்னமெய்த் தவஞ்செய் பெருமையர் சிவமாத்
தோற்றஞ்சால் யாவையும் காண்பார்
பன்னரும் சமம்ஆ தியஇரு மூன்றின்
மேற்படப் பகாநிலை நிற்பார். 11

அள(வு)அரும் புகழ்சால் வேதவே தாந்தத்(து)
அமைதரு சாரமாய் உள்ள
தள(வுஅ)ரும்(பு) அனையமூர லோர்பாகத்
தம்பிரான் அருட்கலப்(பு) உறுத்தும்
களவரும் தெய்வ வெள்ளிய நீறும்
காமர்கண் மணியும்ஐந்(து) எழுத்தும்
பிள(வு)அரும் பெரும்சா தனம்எனக் கொண்ட
பெரியவர் அரியவர் அனையார் 12

தேம்புரி கடுக்கைச் சிவபிரான் அடிகள்
தியானம்செய் வதற்(கு)இடை யூறாத்
தோம்புரி தகைக்கா மாதிகள் நாளும்
சொப்பனத் தினும்கலந்(து) அறியார்
நாம்புரி செய்கை சிற்றுயி ரிடத்து
நவிற்றிடார் நலமுறப் பொலிந்து
தாம்புரி தவத்திற்(கு) அளவிலர் மாயோன்
சதுமுகன் தோற்றம்ஈ(று) அளப்பார். 13

வழிமதுப் பிலிற்றும் கற்பக நறுந்தார்
வானவர் ஆயிரம் மலர்ந்த
விழியுடைக் கடவுள் விரிமலர்ப் பொகுட்டு
மேல்உறை நான்முகப் பெருமான்
கொழிசுவைத் தமிழ்நேர் மொழித்திரு மடந்தை
குவிமுலை திளைக்கும்மார்(பு) உடையான்
ஒழிதரற் பால இனையர்தம் போகம்
ஒருபொருள் எனக்குறிக் கொள்ளார். 14

திரைஎறி அளக்கர் ஏழும் ஒன்(று) ஆகிச
செறியினும் ஒன்றன்மேல் ஒன்றா
வரையெறி கொடுங்கான் மண்டினும் கறுத்த
மங்குல்நின்(று) அசனியே உகினும்
விரைஎறி கடுக்கை மாலிகைத் தடந்தோள்
விண்ணவன் அடிஅலால் பேணார்
புரைஎறி மனத்தில் சலிப்(பு)உறார் சற்றும்
பூரண சொரூபராய் அமர்வார் 15

தோற்றம் ஈறுஇகந்து சச்சிதா நந்த
சொரூபரே ஆய்அமர் தருதற்(கு)
ஏற்றசா தனம்ஓர் நான்(கு)அவை பெறுதற்(கு)
இயைந்தசா தனம்சிவ பத்தி
ஆற்றவும் அதுதான் பெறுதற்(கு) உபாயம்
அண்ணலார்அமர் தலப்பெருமை
சாற்ற உட்கோடல் எனத்துணிந்(து) உள்ளார்
சாந்தமே உருக்கொண்(டு) அன்னார். 16

*தொடரும்.....*

# தூண்டு தவ விளக்கனைய திலவதியார்

சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

திருநாவுக்கரசரின் வரலாற்றைப் பாடுகிற தெய்வச் சேக்கிழார் மொத்தம் 429 பாடல்களிலே ஏறக்குறைய 10 விழுக்காடு, 40 பாடல்கள் அவரது தமக்கையார் புண்ணியத்தவச் செல்வி திலகவதியார் பற்றி உருகி உருகிப் பாடுகிறார்.

அப்பர் வாழ்க்கையிலே நான்கு படித்தரங்களைக் காண்கின்றோம்.

**"அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ,**
**உலகில் வரும் இருள் நீக்கி ஒளிவிளங்கு கதிர்போல**
**மலரும் மருள் நீக்கியார் வந்துஅவ தாரஞ் செய்தார்"**

மருள் நீக்கியாராக அவதாரஞ் செய்தவர் - நம்பர் அருள் இல்லாமையினால் சமண் சமயம் சார்ந்து தருமசேனர் ஆனார். பின்னர் தனக்கு முன் பிறந்த - அப்பர் பிறப்பை அவதாரம் என்ற சேக்கிழார் திலகவதியார் பிறப்பை, "திகழவரும் திருஅணைய திலகவதியார் பிறந்தார்" என்றே குறிப்பிடுகிறார். இவரை நாயன்மாராக்க இயலாததனால் அப்படிக் குறிப்பிட்டாரா? திலகவதியார் பக்தியின் வலுவாலே / தவப்பயனாலே சைவம் திரும்பித் திருவதிகைப் பெருமானால் "நாவுக்கரசர்" என்று அழைக்கப்பட்டார். பின்னர் அனைத்து நற்பண்புகளையும் பெற்றுப் போற்றிச் சைவம் தழைக்கவும் மனித குலப்பண்புகள் வளரவும் இயலும் வகையெல்லாம் தொண்டாற்றி முதிர் பருவத்தில் ஞானசம்பந்தப் பிள்ளையாரால் அப்பர் என்றழைக்கப் பட்டார்.

மருள் நீக்கியார் தருமசேனரானது இறைவன் அருள் இல்லாமையால் திருநாவுக்கரசராக மாறியது - தமக்கை திலகவதியார் தம் அருட்கொடையாலே - அப்பராக மாறியது வளர்ச்சியின் இயல்பு. எனவே மூன்றாவது படிவம் தான் நாவுக்கரசர் வாழ்விலே மிக முக்கியமானது. அதற்கு உதவியவர் வழிகாட்டியவர் திலகவதியார்.

திலகவதியார் பற்றிப் பாடுகிற சேக்கிழார் பலவகையாலும்

அவரைச் சிறப்பித்து உருகி உருகிப் பாடுகிறார். "திரு அனைய திலகவதியார் பிறந்தார்". "செம்மலர்மேல் திருஅனைய திலகவதியார்," "அம்பொன்மணி நூல் தாங்காது அனைத்து உயிர்க்கும் அருள் தாங்கி இம்பர் மனைத் தவம் புரிந்து திலகவதியார் இருந்தார்". "திருமடம் அமைத்து வாழ்ந்தார்" "மன்னுதபோதினியார்" "தூண்டுதவ விளக்கனையர்" "செய்தவ மாதவர் வாழும் திருவதிகை" "நின்ற தபோதினியாரும் நின்மலன்பேர் அருள்நினைந்து" "திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப் பெருவாழ்வு வந்தது" என்ற இவ்வார்த்தைகளால் சேக்கிழார் திலகவதியார் இறையன்பை பக்திப்பெருக்கை, ஒழுக்கவாழ்வை, உழவாரப் பணியைப் போற்றிப் பாடுகிறார்.

திலகவதியாருக்கு அன்றைய வழக்கப்படி பன்னிரண்டு ஆண்டு நிறைந்த உடன் திருமணம் பேசத் தொடங்கினார்கள். கண்ணகிக்கும் பன்னிரண்டு வயதிலே தான் திருமணம் செய்யப்பட்டது. காரைக்கால் அம்மைக்கு - "இல் இகவாப் பருவத்தில்" என்கிறார் சேக்கிழார். பெண்கள் பூப்படைந்த பின்னரே அம்மையார் காலத்தில் திருமணம் நடைபெற்றது என்பது தெரிகிறது. முன்னரும் (கண்ணகி), பின்னரும் (திலகவதி) பழக்கம் மாறியதா ? இல்லை பன்னிரண்டு வயதிற்குள் பூப்படைந்து விடுவார்கள் என்றெண்ணித் திருமணம் பேசப்பட்டதா? தெரியவில்லை.

மேலும் அக்காலத்து மணமகன் வீட்டாரே பெண் கேட்டு வருவது மரபு என்று தெரிகிறது. கண்ணகி, காரைக்கால் அம்மையார், திலகவதியார், ஏயர்கோன் கலிக்காமர் வரலாறு முதலியவற்றால் அறிகிறோம். அக்கால மரபுப்படி கலிக்காமர் என்னும் வீரத்தளபதி வீட்டினர் பெண் கேட்டு வந்தனர். "குணம் பேசிக் குலம் பேசிக் கோதில் சீர்ப் புகழனார்... பைந்தொடியை மணம் நேர்ந்தார்". குணமும் குலமும் தான் திருமணத்திற்கு முக்கியமானவை என்பது பழைய வழக்கம். பணம் பேசாத காலம் அது.

மணம் பேசி முடித்த பின்னர் பெற்றோர் விதி வசமாக அகால

மரணம் அடைந்தனர். கலிப்பகையாரும் "வேல் வேந்தன் ஏவப் போய் அம்முனையில் பகை முருக்கி அமருலகம் ஆள்வதற்கு" ... மாண்டு போயினார்.

திருமணம் நிச்சயம் செய்யப்பட்டதே ஒழிய எந்த ஒரு சடங்கும் நிகழ்வும் நிகழவில்லை. கலிப்பகையாரைப் பார்த்தது கூட இல்லை என்றாலும் திலகவதியார் "இந்த உயிர் அவர் உயிரோடு இசைவிப்பன்" என்று உயிர்துறக்கத் துணிகின்றார்.

ஆனால் மருள் நீக்கியார், "என்னை இனித் தணிக்கை விட்டு ஏகுவீர் எனில் யானும் முன்னம் உயிர்நீப்பன்" என்று உறுதியாய் உரைக்கத் தமக்கையார் மனம் மாறி,

**"தம்பியார் உளர் ஆக வேண்டும் என வைத்த தயா**
**உம்பர்உலகு அணையஉறு நிலைநீக்கி உயிர்தாங்கி**
**அம்பொன்மணி நூல்தாங்காது அனைத்து உயிர்க்கும் அருள்தாங்கி**
**இம்பர் மனைத் தவம்புரிந்து திலகவதியார் இருந்தார்."**

தம்பிக்காக இவ்வுலகில் வாழ்ந்தார். அனைத்து உயிர்க்கும் அருள்வாராக வாழ்ந்தார்; தவம்புரிந்து இருந்தார். இந்தத் தியாகம், கருணை, சாந்தம் பண்பு அனைத்தும் தோன்றியது பன்னிரண்டு வயதே ஆன பெண்ணுக்கு என்றால் அதற்குக் காரணம் ஆன அவர் பிறப்பும் அவர்தம் குலப்பண்பும் எவ்வளவு உயர்ந்தன.

இந்தக் குலப்பண்புகள் தானே பின்பு அப்பர் வாழ்விலே, எல்லாக் காலத்தும் இடத்தும் சமயப் பொறை காக்கவும், கருணை பொழியவும் மக்கள் துயர் களையவும் செய்து அடியவருள் அரசராக உயர்த்தின.

தம்பிக்காக உயிர்வாழ ஒப்புக்கொண்டு தவ வாழ்க்கை ஏற்றார் தமக்கை. தம்பியோ அக்காவை அம்போ என்று உதறிவிட்டு

**"நல்லாறு தெரிந்துரை நம்பர் அருளாமையினால்**
**கொல்லாமை மறைத்து உறையும் சமண் சமயம்"** -குறுகினார்.

தம்பிக்காக வாழ்ந்த தமக்கையோ - அவரைச் சபிக்கவில்லை

சினம் கொள்ளவில்லை. தன்னையும் சபித்துக் கொள்ளவில்லை. இதுவும் ஈசன் விருப்பமே என்று பொறுமையுடன் ஏற்றுக் கொண்டு "சிவ நன்னெறியே சேர்வதற்கு நாதன் அருள் நண்ணுவார்" ஆகத் திருவதிகை அடைந்து திருமடம் அமைத்து உறைந்தார். தவ வாழ்க்கை வாழ்ந்து

**"புலர்வதன் முன் திருஅலகுப் பணி மாறி புனிறு அகன்ற**
**நலம்மலி ஆன் சாணத்தால் நன்கு திரு மெழுக்கிட்டு**
**மலர்கொய்து கொடுவந்து மாலைகளும் தொடுத்தமைத்துப்**
**பலர்புகழும் பண்பினால் திருப்பணிகள் பல செய்தார்"**

அப்போதும், தன்பின் பிறந்தான் பரசமயம் சேர்ந்தது குறித்தே கவலைப்பட்டார்.

**"தூண்டு தவ விளக்கனையர் சுடர்ஒளியைத் தொழுதுஎன்னை**
**ஆண்டருளும் நீர்ஆகில் அடியேன் பின் வந்தவனை**
**ஈண்டு வினைப் பரசமயக் குழிநின்றும் எடுத்தருள**
**வேண்டும் எனப் பலமுறையும் விண்ணப்பம் செய்தனரால்"**

என இறைவனை வேண்டினார். கேட்டதைக் கொடுக்கும் இறைவன் தருமசேனருக்குத் தந்தான் சூலை நோய். வட அனலும் கொடுவிடமும் போலக் கொடியன எல்லாம் கூடிச் சேர்ந்தன போல் குடலைச் சுருட்டிய சூலையின் வாதனை தாங்காது பல் வழியிலும் முயன்று தோற்றுப் பின்னர் தருமசேனருக்குத் தமக்கை நினைவு வருகிறது.

**"பண்டை உறவு உணர்ந்தார்க்கு திலகவதியார் உளராக்**
**கொண்டு அவர்பால் ஊட்டுவான் தனைவிட்டார் குறிப்புணர்ந்த"**

இங்கே பண்டை உறவு என்பதிலே முன்பிறந்த தமக்கை நினைவு - மற்றும் முற்பிறப்பில் தான் சிவனை நோக்கித் தவம் புரிந்து முற்றாத நினைவும் உணர்ந்தார் என்று உணர்த்துகிறார். தம்பிக்காக அல்லும் பகலும் ஆண்டவனை வேண்டிய அக்காவோ அழைத்தவுடன் ஓடவில்லை, பதறவில்லை, அமைதி காக்கிறார்.

“நன்று அறியா அமண்பாழி நண்ணுகிலேன் எனும் மாற்றம் சென்று அவனுக்கு உரை” என்று திலகவதியார் மொழிந்தார். தம்பியைச் சீரழித்த இடத்திற்குத்தான் செல்லச் சம்மதிக்காமல் அவனை இங்குவரச் சொல் என்னும் குறிப்புத் தோன்றச் சொன்னார். எப்போது அழைப்பார் ஏதமில் தமக்கை என்று காத்திருந்தவர் போல சமணச் சின்னங்கள் அனைத்தையும் அழித்து ஒதுக்கி விட்டு -

**“போவதற்குத் துணிந்து எழுந்தார்”**
**“செய்தவ மாதவர் வாழும் திருவதிகை சென்று அடைவர்”**

தமக்கை அருள் பெறுவது என்று தீர்மானித்த பின்னே தயக்கம் ஏன் எல்லாவற்றையும் தூக்கி எறிந்துவிட்டு சமணத்தைத் துறந்தே திருவதிகை வந்தார் என்கிறார் சேக்கிழார்.

**“வந்து அணைந்து திலகவதியார் அடிமேல் உறவணங்கி**
**நந்தமது குலம் செய்த நல் தவத்தின் பயன் அனையீர்**
**இந்த உடல்கொடும் சூலைக்கு இடைந்து அடைந்தேன் இனிமயங்காது**
**உய்ந்து கரை ஏறும் நெறி உரைத்தருளும் என உரைப்ப”,**

திலகவதியாரும், “அருந்துயர் உழந்தீர் எழுந்திரீர்”. ரொம்பச் சிரமப்பட்டு விட்டாய் தம்பி எழுந்திரப்பா என்று சொல்லி ஐந்தெழுத்து ஓதி திருநீறு அளித்தார்.

தருமசேனராக இருந்தவர் சைவராக மாறினார். மாற்றத்தை நிகழ்த்தியவர் தபோதினியார் திலகவதி அம்மையார். சமயமாற்றச் சடங்கு நிகழ்த்திய முதற்பெண்மணி திலகவதியாரே !

**“திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப்**
**பெருவாழ்வு வந்ததுஎனப் பெருந்தகையர் பணிந்து ஏற்று அங்கு**
**உருஆர அணிந்து தமக்கு உற்ற இடத்து உய்யும் நெறி**
**தருவாராய் தம்முன்பு வந்தார்பின் தாம் வந்தார்”**

தமக்கையை வழிகாட்டியாகக் கொண்டு அவர்பின் வந்தார்.

மதமாற்றச் சடங்கு முடிந்துவிட்டது: திருவதிகை வீரட்டானத் திருக்கோவிலில் மாற்றம் அடைந்த மருணீக்கியராகத் தம்பி நுழைந்தார். எப்படி நுழைந்தார்? உழவாரப் பணி செய்யத் தொடக்கமாக - திருஅலகும் திரு மெடுக்கும் தோண்டியும் கொண்டு ஆறணிந்தார் கோயிலினுள் அடைந்தார்.

தொண்டனாகக் கோயிலினுள் புகுந்த அடியவரைக் கைத்திருத் தொண்டு மட்டும் செய்யவிடாது மொழித்தொண்டும் இசைத்தொண்டும் செய்வாராக மாற்றுதற்காக மருள் நீக்கியார் உணர்வில் உவகை தோன்றப் பாட வைத்தான். (நால்வர் பெருமக்கள் அனைவரும் இறைவன் அருள்சுரக்க அமுதைப் பொழிந்தவர்களே) "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்ற பதிகம் பாட மகிழ்ந்த ஆடலரசன் இவரைப் பாடலரசனாக அறிவித்து "நாவுக்கரசன்" என்று அழைத்து என்றும் எம்புகழ்பாடு எனப் பணித்தான். தருமசேனரை மாற்றி மீண்டும் மருள் நீக்கியராக்கி நாவுக்கரசராக உயர்த்திய பெருமையும் வாழ்நாள் முழுவதும் உழவாரப்பணி செய்ய வழிகாட்டியதும் அன்னாரின் தமக்கையார் தூண்டுதவ விளக்கனைய திலகவதியாரே!

ஒரு நாடாளும் மன்னனைச் சமணத்தில் இருந்து சைவத்திற்கு மீட்டதற்காக, நின்றசீர்நெடுமாறன், மங்கையர்க்கரசியார், அமைச்சர் குலச்சிறையார் என மூவரை நாயன்மார்களாக ஆக்கிய சுந்தரர் ஏன் சமண சமயம் வேரோடு அழிவதற்குப் பாடுபட்ட, பல இன்னல்களை ஏற்றுச் சைவத்தை வளர்த்த, எண்பத்திரண்டு அகவை வரை திருத்தொண்டு செய்து பல்லாயிரக்கணக்கான சிவனடியார்களை உருவாக்கிய அப்பரைச் சைவத்திற்கு மடைமாற்றம் செய்த தவச்செல்வி திலகவதியாரை நாயன்மார்களுள் ஒருவராகக் கொள்ளவில்லை? அதனால் திலகவதியாரை நாயன்மாராக்கித் தன்னால் பாடமுடிய வில்லையே என்ற ஏக்கம் சேக்கிழாரின் பாடல்களிலே தெரிகிறது. அதனால்தான் திலகவதியாரைப் பலவழியாகவும் போற்றிப் புகழ்கின்றார்.



KOVILOOR ANDAVAR
A. No.............
LIBRARY, KOVILOOR

**Available Knitted Fabric** (On Order Basis)

| | |
|---|---|
| **18 GG Rib** | **Dia : 11 - 36** |
| **24 GG Single Jersey** | **Dia : 16 - 36** |
| **28 GG Single Jersey** | **Dia : 18 - 34** |
| **28 GG SJ Openwidth** | **Dia : 30 - 34** |

**Hosiery Yarn Available**

**PC / PV / 100 % COTTON / SLUB / VISCOSE**

***THE PARADISE KNITTERS***

2/311, Periyandipalayam Pirivu,
6th Cross, Hare Rama Hare Krishna Nagar
Mangalam Road, **TIRUPPUR - 641 687**
Mobile : 98652 04051 , 98651 22844 , 98422 70168

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

கோவிலூர் – காரைக்குடி – 630 307.

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

தொலைபேசி : 04565 - 234 523 கைபேசி : 94434 42361

பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:

B.A., English
B.Sc., Computer Science
B.Com.,
B.Com. (C.A).,
B.B.A.,
B.Sc., Maths
B.Sc., Visual Communication

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரியவாய்ப்பு !!

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலில் தொடங்கப்படும் வகுப்பு)

விண்ணப்பங்கள் கிடைக்குமிடம் : நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி
கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி
கோவிலூர்